4th March 1958]

THE HON. SRI M. A. MANICKAVELU : அப்படித் திறக்கப் பட்ட ஆஸ்பத்திரிகளும் டாக்டர் இல்லாததால் மூடப்பட்டிருக்கின்றன. சில இடங்களிலே கம்பவுண்டர்கள் அவர்களாலான சிகிச்சையும் செய்கிறார்கள்.

SRI S. LAZAR : இந்த ப்ரைமரி ஹெல்த் ஸெண்டருக்குத் தேவையான மருந்துகளைத் தொடர்ந்து சப்ளை செய்யப்படுவதற்கு சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : Will you kindly repeat your question?

MR. SPEAKER : The hon. Member may please repeat his question.

SRI S. LAZAR : So far as Primary Health Centres are concerned, what is the arrangement made by the Government to supply the required medicines continuously and under whose administration, they will be given?

THE HON. SRI M. A. MANICKAVELU : The District Medical Officer will be in overall charge of these Primary Health Centres. The main difficulty is about securing medical officers; there is no difficulty about medicines.

SRI P. G. MANICKAM : டாக்டர் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறதென்று நிலைக்கிறபடியால், எம்.பி.பி.எஸ். பரீட்சையில் தேறியவர்களை ஒன்றிரண்டு வருஷங்கள் இத்தகைய செண்டர்களில் வேலை பார்க்கவேண்டுமென்று உத்தரவைப் பிறப்பிக்க சர்க்கார் முன்வருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதையும் யோசனை செய்தோம். எம். பி. பி. எஸ். பரீட்சையில் தேறியவுடனே அவர்களை இத்தகைய ப்ரைமரி ஹெல்த் செண்டர்களில் போட்டால், எவ்வளவு தூரம் நன்றாகப் பயன்படும் என்பது சந்தேகத்திற்குரியது. புதிதாகத் தேறி வந்தவர்களை இங்கெல்லாம் ஒன்றிரண்டு வருஷம் போடுவதைவிட அனுபவம் பெற்றவர்களை போடுவது நன்றாக இருக்கும் என்று அந்த முறையைக் கையாண்டு வருகிறோம்.

* 191 *Q.*—SRI S. M. ANNAMALAI : Will the Hon. the Minister for Revenue be pleased to state the reasons for closing the Primary Health Centre at Jamnaputtur in the North Arcot district?

THE HON. SRI M. A. MANICKAVELU : No Primary Health Centre was ever opened at Jamnaputtur.

SRI S. M. ANNAMALAI : ப்ரைமரி ஹெல்த் செண்டர் ஒன்று ஜவ்வாது மலை மீது இருந்தது. அந்த ஒரு செண்டரும் காவனூருக்கு மாற்றப்பட்டிருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அது உண்மையா ? அப்படியாயின் அதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதைப்பற்றி என்னிடம் தகவல் ஒன்றும் இல்லை. கனம் அங்கத்தினர் அதைப்பற்றி ஏதாவது குறிப்பாக எழுதியனுப்பினால் அதை நான் கவனிக்கிறேன்.

*Cement factory for North Salem*

* 192 *Q.*—SRI M. P. SUBRAMANIAM : Will the Hon. the Minister for Industries be pleased to state whether there is any proposal to start a cement factory in the North Salem making use of the raw materials available there?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir.